10th April 1958]

பெய்ல்யூராய்ப் போய்விட்டது. மேற்கொண்டு வசதி இருக்குமானல் வசதி இருக்கும் இடங்களில் மேலும் பரீட்சார்த்தமாகச் செய்யப்படும்.

SRI N. R. THIAGARAJAN : மதுரை பல்லடம் தாலூகா ஸ்ரீரங்க புரத்தில் வெட்டப்பட்ட கிணற்றில் தண்ணீர் இருந்தும் அங்கே குழாய் வைப்பதற்கோ இதர இயந்திர சாதனங்களைப் பொறுத்துவதற்கோ மேற் கொண்டு முயற்சி செய்யாமல் அதை நிறுத்திவிட்டதற்குக் காரணம் என்ன ? மேற்கொண்டு அங்கே நடவடிக்கை எடுக்கப்படுமா ? 8-40 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மதுரை ஜில்லாவில் இரண்டு குழாய்க் கிணறுகள்தான் பரீட்சார்த்தமாகச் செய்யப்பட்டது. இரண்டும் வெற்றிகரமாக ஏற்படவில்லை.

SRI M. P. SUBRAMANIAM : அமைச்சர் அவர்கள் கூறிய பதிலி லிருந்து சேலம் மாவட்டத்தில் ஒரு குழாய்க் கிணறுகூட எடுத்துக் கொள்ளப்படவில்லை என்று அறிகிறேன். அங்கே தகுதியான பகுதி இல்லை என்று அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா ? அதற்கு அந்த மாவட்டத் தில் அவசியம் இல்லை என்று கருதுகிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவை பரிட்சார்த்த மாகத்தான் எடுத்துக்கொள்ளப்பட்டன. சில ஜில்லாக்களில்தான் இதுவும் செய்யப்பட்டது. சேலம் ஜில்லா நிலைமைக்குத் தனிக் கேள்வி கேட்டால் பதில் அளிக்கமுடியும்.

SRI A. A. RASHEED : What is the expenditure incurred on putting up these tube-wells?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The total expenditure incurred on this scheme for well sinking so far is about 21 lakhs of rupees.

*Hospital for Virudunagar*

* 656 Q.—SRI A. V. P. ASAITHAMBI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether the Government received any representation from Sri M. S. Periaswamy, ex-Chairman of the Virudunagar Municipality, regarding the building of a hospital at Virudunagar; and

(b) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The matter is under the consideration of Government.

SRI A. V. P. ASAITHAMBI : தலைவர் அவர்களே, லட்சம் ரூபாய்க்குமேல் நன்கொடை தருவதாக சர்க்காருக்கு அறிவித்திருந்தும் மூன்று நான்கு வருடங்கள் ஆகிவிட்டன. இதுவரைக்கும் எவ்வித நட வடிக்கையும் எடுக்காமல் இருப்பது என் ? அதை இந்த வருஷத்திலாவது எடுத்துக்கொள்ள முயற்சிப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : லட்சம் ரூபாய் மாத்திரம் அல்ல. நான்கைந்து லட்சம் ரூபாய்க்குமேல் ஆஸ்பத்திரி கட்டிக் கொடுப்ப தாக சொல்லியிருக்கிறார். ஆனல் இப்போது இருக்கிற ஆஸ்பத்திரியை எடுத்துக்கொண்டு அதைக் கட்டித்தருவதாகச் சொன்னர். அது வேண் டாம். தனியாகவே கட்டித் தரவேண்டும் என்பதாகக் கடிதப் போக்கு வரத்து நடந்து கொண்டிருக்கிறது.